நக்சல்பாரி பாதையே
நமது பாதை என
முழங்குவோர்
நக்சல்பாரியில்
நடக்கும் சமூக
நிகழ்வுகள் பற்றி
சிந்தித்து பார்க்கவே
மாட்டார்களா?

–தோழர் சு

மேற்கு வங்க மாநிலம் டார்சிலிங் மாவட்டத்தின் ‘நக்சல்பாரி, காரிபாரி’ எனும் கிராமங்களின் விவசாயிகள் நடத்திய போராட்டத்தின்போது நிலப்பிரபுக்கள் கடுமையான ஒடுக்குமுறையை ஏவிவிட்டதால், டார்சிலிங் மாவட்ட விவசாயிகள் சங்கம், நக்சல்பாரி பகுதி விவசாயிகளின் போராட்டத்தை தீவிரத் தன்மையில் கொண்டு சென்றது. அதிலிருந்து இந்தியாவில் விவசாயிகளின் போராட்டத்தை தீவிரமாகக் கொண்டு செல்ல வேண்டுமென எண்ணியோர் புதிய இயக்கம் கண்டனர். அந்த புதிய இயக்கம் நக்சல்பாரி கிராம விவசாயிகள் போராட்டத்தையொற்றி தொடங்கப்பட்டதால் பத்திரிகைகள் (ஊடகங்கள்) அவ்வியக்கத்தை தனியே சுட்டிக்காட்ட அந்த கிராமத்தின் பெயரிலேயே ‘நக்சல்பாரிகள்’ என பெயரிட்டு செய்திகளை வெளியிடலாயினர். அதனால் காலப்போக்கில் அப்பெயரே ‘நக்சல்பாரிகள்’ என்று நிலையாக நின்று விட்டது.

அந்த நக்சல்பாரி கிராமம் உள்ள டார்சிலிங் மாவட்டத்து மக்களின் இன்றைய அரசியல் நிலைபாடு என்ன? அந்த டார்சிலிங் மாவட்டத்து மக்கள் தான் இன்றைக்கு 'கூர்க்காலேண்ட்' கோரிக்கையை முன்வைத்து முழக்கமிட்டு போராடி வருகின்றனர். அது எதைக் காட்டுகிறது? அம்மாவட்ட மக்களுக்கு உழவர்களுக்கு நிலம் என்பது தேவையானது தான். அது அவர்களின் பொருளாதார கோரிக்கை. அந்த நிலம் அவர்களுக்கு கிடைக்க வேண்டுமென்றால் அம்மக்களுக்கு அரசியல் அதிகாரம் வேண்டும். அம்மக்களுக்கு அரசியல் அதிகாரம் கிடைக்க 'கூர்க்காலேண்ட்' வேண்டுமென அம்மக்கள் கருதுகின்றனர். அதைத்தான் சரியாக புரிந்துகொள்ள வேண்டும். அதாவது அம்மாவட்ட உழவர்களின் போராட்டத்தை, நிலத்திற்கான போராட்டத்தை (பொருளாதார போராட்டத்தை) அம்மாவட்ட மக்களின் அரசியல் அதிகாரத்திற்கான போராட்டமாகிய 'கூர்க்காலேண்ட்' எனும் கோரிக்கையுடன் இணைந்திருக்க வேண்டும். அப்போது அங்கு நடந்த உழவர்புரட்சி வளர்ந்து முன்னேறியிருக்கும். அவ்வாறு

‘கூர்க்காலேண்ட்’ எனும் அரசியல் முழக்கத்தோடு இணைக்கப்படாத போது நடக்கும் உழவர் போராட்டங்கள் பொருளாதார வாதமே தவிர, உழவர் புரட்சியாகாது.

அதேபோல் தெலுங்கானா உழவர் புரட்சி நடந்த இடத்தில் இன்று, தெலுங்கானா தனிமாநில போராட்டம் வெடித்துக் கிளம்பி உள்ளது. அது எதைக்காட்டுகிறது? தெலுங்கானா மக்களுக்கு அரசியல் அதிகாரம் வேண்டும் என்பதையே ஆனால் தெலுங்கானா, மக்களுக்கு சரியான அரசியல் அதிகாரம் கிடைப்பதென்பது ‘தெலுங்கர்’ நாடு அமையும்போது மட்டும்தான்.

ஆந்திராவில் உள்ள மாவோயிஸ்ட்டுகள்? தெலுங்கானா தனிமாநில கோரிக்கை போராட்டத்தை ஆதரிக்கின்றனர். அவர்கள் ஆதரவு என்பது அப்போராட்டம் தீவிர தன்மையில் நடக்கிறது என்பதற்காகவும், அம்மக்களிடமிருந்து தனிமைப்பட்டு விடக்கூடாது என்பதற்காகவும் ஆதாயம் கருதிய ஆதரவு என்பதாக படுகிறதே தவிர சரியான அரசியல் நிலைப்பாட்டிலிருந்து

மேற்கொள்ளப்பட்ட ஆதரவாக தெரியவில்லை. தங்களுக்கு அரசியல் அதிகாரம் வேண்டும் என்பதற்காகத்தான் தெலுங்கானா மக்கள் போராடுகிறார்கள். ஆனால் இந்திய அரசுக்குள் தெலுங்கானா ஒரு மாநிலமாக இருப்பதனால் தெலுங்கானா மக்களுக்கு அரசியல் அதிகாரம் கிடைத்திடாது. தெலுங்கு தேசிய இனத்திற்கு 'தெலுங்கர் நாடு' எனும் நாடு கிடைக்கும் போதுதான் தெலுங்கானா மக்களுக்கு முழுமையான அரசியல் அதிகாரம் கிடைக்கும். தெலுங்கானா மக்களுக்கு மட்டுமல்லாது ஆந்திரமக்கள் அனைவருக்கும் அரசியல் அதிகாரம் கிடைக்கும்.

தெலுங்கானா மக்களுக்கு முழுதிருப்தி ஏற்பட தெலுங்கர் நாட்டிற்குள், தெலுங்கானா மாநிலம் தனி மாநிலமாக அதிகார பகிர்வு அடிப்படையில் இருக்க முடியும். அது மட்டுமல்லாது ஆந்திராவில் உழவர் புரட்சியின் அரசியல் அதிகாரம் என்பது 'தெலுங்கர் நாடு' என்பதில்தான் தங்கியுள்ளது. தெலுங்கர் நாடு எனும் அடிப்படையான அரசியலை முன் வைக்காமல் அங்கு நடத்தப்படும் உழவர் போராட்டங்கள் எதுவும், ஆயுதம்

ஏந்தி போராடினாலும் உழவர் புரட்சியாகாது. எனவே தெலுங்கானா தனிமாநில கோரிக்கை போராட்டங்களை ஆதரித்து கொண்டே, அப்போராடத்தை 'தெலுங்கர் நாடு' எனும் அரசியலுடன் இணைக்க வேண்டும். அத்துடன் ஆந்திராவின் உழவர் போராட்டங்களை எல்லாம் தெலுங்கர் நாடு முழக்கத்துடன் இணைக்க வேண்டும்.

அந்த அனுபவங்கள் காட்டும் உண்மையாவது; தமிழகத்தில் நடத்த வேண்டிய உழவர் புரட்சி தமிழ் தேசிய விடுதலை எனும் அரசியலை மையப்படுத்தி நடத்த வேண்டும் என்பதேயாகும்.

நக்சல்பாரி குழுவினர் நடத்தும் பல போராட்டங்கள் பழங்குடி மக்களின் போராட்டங்களாகவே உள்ளன. அவற்றையும் 'உழவர் புரட்சி' என்றே அவர்கள் கூறுகின்றனர். ஆனால் அவை உழவர் புரட்சியாகாது. அதாவது பழங்குடி இனத்தவர் பழங்குடி இன சமூகமாகவே வாழ்ந்து வருகின்றனர். "அவர்களிடமும் அதாவது தனியுடமை இருக்கின்றது" என சொன்னாலும் அச்சமூகங்களில் இன்னமும் வர்க்கப் பிரிவினை ஏற்படவில்லை.

வெளியிலிருந்துதான், வர்க்கப் பிரிவினையுள்ள சமுதாயத்திலிருந்துதான் மேலிருந்து சுரண்டல் திணிக்கப்படுகிறது. அச்சமூகத்தவர்களுக்கும் வெளியாளர்களுக்குமான முரண்பாடே அங்கு நிலவுவது. இன்னும் சொல்லப்போனால் புராதான பொதுவுடமை சமுதாயத்திற்கும், இன்றைய தனியுடைமை சமுதாயத்திற்குமான முரண்பாடு என்று கூட சொல்லலாம். அம்மக்களுக்கு பாட்டாளி வர்க்கம் தலைமை கொடுப்பது என்றால், அவர்களை புராதான பொதுவுடைமை அமைப்பிலிருந்து நவீன சோசலிச கட்டமைப்பு சமுதாயத்திற்கே கொண்டு வர முடியும். இடையிலான வர்க்க பிரிவினை சமுதாயங்களான ஆண்டான் அடிமைச் சமுதாயம், நிலபிரபுத்துவ சமுதாயம், முதலாளிய சமுதாயம் என்கிற சமுதாய முறைகளுக்கு செல்லாமலே நவீன சோசலிச சமூகத்திற்கு கொண்டு செல்ல வேண்டும்.

எனவே பழங்குடி இனச் சமூகத்திற்கும், இந்திய அரசால் அச்சமூகத்தின் மீது மேலிருந்து திணிக்கப்படும் தனியுடமை சுரண்டல்

ஆதிக்கங்களை எம்முறையிலான போராட்டங்களை கொண்டு எதிர்ப்பது என்பதும், முக்கியமாக அவர்களின் அரசியல் அதிகாரத்திற்கான போராட்டம் எதுவென கண்டறிந்து, அந்த அடிப்படையான போராட்டத்துடன் பிற போராட்டங்கள் இணைக்கப்பட வேண்டும். அவ்வகையில் பார்த்தால் சில இடங்களில் தனிநாடு கோரிக்கையாகவும், சில இடங்களில் தனி மாநில கோரிக்கையாகவும், சில இடங்களில் மாவட்ட கவுன்சில் கோரிக்கையாகவும் எழுந்துள்ளதை காண முடிகிறது.

தமிழ் நாட்டிலும் பழங்குடி இன மக்கள் உள்ளனர். மேற்குத் தொடர்ச்சி மலைகளிலும், கொல்லிமலை, பச்சைமலை, ஏற்காடு மலை, ஜவ்வாது மலை, கல்வராயன், சேர்வராயன் மலை என பல மலைப் பிரதேசங்களில் பல பழங்குடியின மக்கள் வசிக்கின்றனர். அவர்களைப் பொறுத்து அடிப்படையாக அனைத்து மலைவாழ் மக்களுக்குமென ஒரு மலை கவுன்சில் தேவை. அம்மக்களின் சிலவகைப் போராட்டங்களில் உழவர் புரட்சிக்கான சாயல் இருக்கும். ஆனால் அப்போராட்டங்கள் உழவர்

புரட்சியாகாது. என்றாலும் தமிழ்நாட்டில் ஏமாற்றி பினாமி பெயர்களில் வைத்துள்ள நிலங்களை கைப்பற்றவும், நிலச் சீர்திருத்த சட்டங்களிலிருந்து விதிவிலக்கு பெற்றுள்ள கோயில் நிலங்களையும் உழவனுக்கு சொந்தமாக்கவும் என ஓரளவுக்கு தான் நிலத்திற்கான போராட்டங்கள் நடத்த முடியும்.

இன்றைய நிலையில் விவசாயிகளிடமுள்ள விளை நிலங்கள் பறிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. விளை நிலங்கள் பறிக்கப்படுவதை எதிர்த்து பல இடங்களில் உழவர்கள் தன்னெழுச்சியாக போராடிக் கொண்டிருக்கின்றனர். ஆகையால் உழவர் புரட்சியின் இன்றைய முழக்கமாகவே ‘உழவனிடமிருந்து நிலங்களை பறிக்காதே’ எனும் முழக்கம் முன் வைக்கப்பட வேண்டும்.

உழவர் புரட்சியை நடத்தக்கூடிய வர்க்கம் ‘உழவர் வர்க்கம்’ என்றாலும், உழவர் வர்க்கம் என்பது ஒரே வர்க்கமல்ல, உழவர் வர்க்கம் என்பதில், கூலி ஏழை உழவர்கள் ஒரு பிரிவாகவும், நடுத்தர உழவர்கள் ஒரு பிரிவாகவும், பணக்கார

விவசாயிகள் என மூன்று பிரிவாக உள்ளனர். இதில் கூலி ஏழை உழவர்களையே முதன்மையாக எடுத்துக் கொள்ளவேண்டும். ஏனெனில் கூலி ஏழை உழவர்கள், உடைமை அற்ற வர்க்கமாதலால் சோசலிசத்தை கட்டமைக்க பாட்டாளி வர்க்கத்துடன் மிக நெருக்கமாக வரக்கூடியவர்கள் என்பதினாலும், தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்தை நடத்துவதில் பாட்டாளி வர்க்கத்துக்கு மிக நெருக்கமாக வரக்கூடிய வர்க்கம் என்பதினாலும், உடைமையற்ற கூலி, ஏழை விவசாயிகள் வர்க்கத்துக்கு முதன்மையான முக்கியத்துவமளிக்க வேண்டும்.

கூலி, ஏழை விவசாயி வர்க்கத்துக்கு முதன்மையான இடம் தரவேண்டும் என்று கூறினாலும், அதற்காக நடுத்தர, பணக்கார விவசாயிகளை ஒதுக்கி விடவோ, உதாசீனப்படுத்தி விடவோ முடியாது, கூடாது. நடுத்தர,பணக்கார விவசாயிகளுடன் ஐக்கிய முன்னணி கட்டுவது அவசியமாகும். நடுத்தர, பணக்கார விவசாயிகளுடன் ஐக்கிய முன்னணி காட்டினால்தான் உழவர் புரட்சி வெற்றிபெறும். எனவே நடுத்தர, பணக்கார விவசாயிகளுடன் ஐக்கிய முன்னணி

கட்டுவது உழவர் புரட்சியின் முக்கிய அம்சமாக விளங்குகிறது.

தமிழ்த் தேசியப் புரட்சியில், உழவர் புரட்சியை இணைத்து பாட்டாளி வர்க்கத் தலைமையிலான சோசலிச தமிழகத்தை படைப்போம்.

மேற்கண்ட அறிக்கை தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சி (மா.லெ) வின் நிறுவனர் மறைந்த தோழர் சு (எ) சுந்தரம் அவர்களால் எழுதப்பட்டது.

தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சி(மா.லெ) வின்
நிறுவனர்

# தோழர் சு (எ) சுந்தரம்

அவர்களுக்கு

மூன்றாம் ஆண்டு

# செவ்வணக்கம்




தமிழ்த் தேசியப் பாதுகாப்பு இயக்கம்

+91 87548 08960